

கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக

# குறள்  விருந்து



குறள்நெறி பரப்பத் **திங்கள் தோறும் வெளி வரும் உலகின் ஒரே சிறுவர் மின்னிதழ்**

தி.வ.ஆ.-2055 ஆவணி- 8 பொ.ஆ.-2024 ஆகத்து-24

**உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்**

இலக்கிய மலர்களின் மணம் கமழும்
இனிய உரையும் எழுத்தும் படைத்தே
இந்திய விடுதலை இயக்கப் போரில்
முந்தி நின்றே களம் கண்ட
திரு.வி.க. புகழைப் போற்றிடுவோம்!
தேசபக்தன் நவசக்தி நாளிதழ் வழியே
நாட்டுப் பற்றைக் கிளர்ந்தெழச் செய்தார்
பலமொழிச் சொற்கள் கலந்தெழுதும்
இதழியல் நடையில் புரட்சி செய்தார்
இனிய எளிய கனித்தமிழ்ச் சொற்களில்
தனியொரு நடையால் தமிழ்நலம் காத்தார்;
தொழிலாளர் துயர்நிலை களைந்திடவே
சங்கம் வைத்தார் கிளர்ச்சி செய்தார்
தன்னலம் கருதாப் பொதுவாழ்வில்
தமிழ்த்தென்றல் புயலாய்ச் சீறியதே!
வெள்ளையர் அரசோ நடுங்கியதே!



தமிழ்த்தென்றல் திரு.வி.க.
[141-ஆம் பிறந்தநாள்]
ஆகத்து 26, 1883 - செப்டம்பர் 17, 1953

மொழியைக் காக்க மறைமலை அடிகளும்
சமூக எழுச்சிக்குப் பெரியார் நெறியும்
தேவை என்பதை அன்றே உணர்த்திய
தியாகச் செம்மல் திரு.வி.க. நூல்களைத்
தேடித் தினமும் படித்திடுவோம்!
நாட்டையும் மொழியையும் போற்றிடுவோம்!
இயற்கை நலனைக் காத்திடுவோம்!
வள்ளுவர் வள்ளலார் வழிநின்ற திரு.வி.க.
வாழ்வியல் நெறியில் இயங்கிடுவோம்!

சிறப்பாசிரியர்:முதுமுனைவர் முரசு நெடுமாறன்
பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாசராவ்
ஆசிரியர்: மறைமலை இலக்குவனார்

# முயற்சி செய்தால் முன்னுக்கு வரலாம்



## தாமரை சீனிவாசராவ்

திருமதி.தாமரை சீனிவாசராவ் நம் இதழின் பொறுப்பாசிரியர்; முற்போக்கு எழுத்தாளர்;பல மகளிர் அமைப்புகளின் ஒருங்கிணைப்பாளர்; கம்போடியா நாட்டு ஆங்கோர் தமிழ்ச்சங்கப் பொருளாளர்;பல மாநாடுகளைத் திறம்பட நடத்திய பெருமைக்குரியவர்.

காமாட்சி ஒரு நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்.சிறு வயதிலிருந்து தனது தந்தையை இழந்து தனது தாயுடன் குடும்பத்திற்காக அல்லும் பகலுமாக பல வேலைகள் செய்து தனது குடும்பத்தைக் காப்பாற்றி வந்தார்.தம்பி,தங்கை நன்றாகப் படிக்க வேண்டும் என்பதற்காகத் தனது கல்வியை பாதியிலேயே நிறுத்தி உழைக்க ஆரம்பித்தார்.மிகவும் குறைந்த வருமானத்தில் மகிழ்ச்சியாகவே நால்வரும் இருந்தனர்.தம்பியும்,தங்கையும் பொறுப்பை உணர்ந்து நன்றாகப் படித்தனர்.தாய் தனது மூத்த மகளின் பொறுப்பை உணர்ந்து பெருமை கொண்டார்.'உன் தியாகத்திற்கு ஈடு செய்ய முடியாது' என்று அடிக்கடி மகளிடம் கூறுவார்.அதெல்லாம் ஒன்றுமில்லை எனக் காமாட்சி சொல்லி அம்மாவைத் தேற்றுவார்.பின்னாளில் தம்பி படித்து வேலைக்கும் செல்ல ஆரம்பித்தார்.மிகவும் மகிழ்ச்சியடைந்தனர் அம்மாவும்,அக்காவும்.தம்பி வேலைக்குப் போகட்டும்.நீ மேற்படிப்புப் படி என்று தங்கையை ஊக்கப்படுத்தி பெரிய கல்லூரியில் சேர்த்தனர்.தங்கையும் படிப்பைத் தொடர வீட்டில் அடுத்த ஏற்பாடு நடக்க ஆரம்பித்தது.தம்பி தன்னுடைய அக்காவிற்குத் திருமணம் செய்யவும் முடிவெடுத்தார்.ஆனால் நீங்கள் இருவரும் திருமணம் செய்து கொள்ளுங்கள் என்று காமாட்சி மறுத்தார்.அம்மாவுடனே நான் இருந்து விடுகிறேன் என்று கூறி வந்த நிலையில்,பல வற்புறுத்தல்களுக்குப் பிறகு திருமணத்திற்கு ஒத்துக் கொண்டார்.தனது அலுவலகத்தில் வேலை செய்யும் ஒரு நபரைக் கண்டு,அக்காவிற்குப் பொருத்தமானவராய் இருப்பார் அவர் என்று முடிவு

செய்தனர்.அவரும் சிறு வயதிலிருந்து பல இடர்ப்பாடுகளுக்கிடையே வளர்ந்தவர்.பொறுப்புடன் தனது குடும்பத்தைக் கவனித்து வருபவர்.கட்டாயமாக அக்காவிற்கு ஏற்ற துணையாக வாழ்நாள் முழுதும் இருப்பார் என்று திருமணத்தை ஏற்பாடு செய்தனர்.வீட்டில் மகிழ்ச்சி களைகட்டியது..இரு வீட்டாரின் ஒப்புதலோடு திருமணம் நடந்தது.அக்காவும் அதே ஊரில் இருப்பதால் அடிக்கடி சந்தித்துக் கொண்டனர்.வேலைக்குச் செல்வதோடு அக்காவிற்கு ஏதாவது தொழில் செய்வதற்கு ஏற்பாடு செய்தால் குடும்ப நிலைமையை உயர்த்தலாம் என்று திட்டமிட்டனர். அனைவரும். எனவே சில இடங்களில் உதவி பெற்று நம்பிக்கையோடு உழைத்தனர். .அனைத்தும் நன்றாகச் சென்று கொண்டிருந்தது. வருடங்கள் பல உருண்டோடின. உழைப்பில் வந்த வருமானம் குடும்பத் தேவைகளுக்கே சென்றது. இருவருமே கடினமாக உழைத்து அவரவர் குடும்பத்திற்குத் தங்கள் கடமைகளைச் செய்தனர். .தம்பியும் உடனிருந்து துணையாக உழைத்தார்.அக்காவிற்கு இரு பிள்ளைகள். தங்கை திருமணம் முடித்து இருக்க தம்பிக்கு பெண் பார்த்துக் கொண்டிருந்தனர்.இனி கவலைப்படத் தேவையில்லை,நமக்கு நல்ல காலம் பிறந்து விட்டது என்று நம்பிக்கையோடும் ,மகிழ்ச்சியோடும் வாழ்ந்து வந்தனர்.தம்பிக்குத் திருமணத்தை முடித்தனர்.தந்தை இல்லாத குடும்பத்தை எவ்வளவு துணிச்சலுடன்,அரும்பாடுபட்டு முன்னுக்கு கொண்டு வந்து விட்டாள் காமாட்சி என்று உற்றார்,உறவினர் கூற நன்றாக இருந்தனர்.

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்.—குறள் 620

"ஊழ்" என்பது வெல்ல முடியாத ஒன்று என்பார்கள். சோர்வில்லாமல் முயற்சி மேற்கொள்பவர்கள் அந்த ஊழையும் தோல்வி அடையச் செய்வார்கள்.



சிறுவர் இலக்கியம்

குறள் விளக்க நாடகம்



# அறிவுக்கு உணவு

## முதுமுனைவர் முரசு நெடுமாறன்

(நம் இதழின் சிறப்பாசிரியர்.உலகப்புகழ்பெற்ற பாவலர்.மலேசியாவின் முதுபெரும் இலக்கியப் படைப்பாளி.தமிழ்நாட்டு அரசால் முதன்முதலில் விருது வழங்கிச் சிறப்புச் செய்யப்பட்ட அயலகத் தமிழர் என்னும் பெருமைக்குரியவர்.மலேசிய வானொலியில் ஆயிரக்கணக்காகக் குழந்தைநாடகங்களை எழுதிக்குவித்த அருந்திறலாளர்.)

காட்சி : 1

இடம் : அன்னம்மாள் இல்லம்
நேரம் : பிற்பகல்
கதை மாந்தர் : அன்னம்மாள், தாமரை
நிலை : பகல் உணவு அருந்தி வந்த தாமரையும் அன்னம்மாளும் கலந்துரையாடுதல்.

அன்னம்மாள் : தாமரை உனக்கு எப்படி நன்றி சொல்வது என்றே தெரியவில்லை.

தாமரை : அதற்கு நான் காரணம் இல்லை. வள்ளலாக விளங்கும் பாரி ஐயாதான், அவர் அமைத்துள்ள அறச்சாலைதான் காரணம்.

அன்னம்மாள் : அந்த அறச்சாலைக்கு அழைத்துச் சென்றதே நீதானே?

தாமரை : பாரி ஐயா ஊர்நடுவே அமைந்துள்ள பெரிய குளம் போன்றவர். அங்கு யார் வேண்டுமானாலும் சென்று நீர் அருந்தலாம்.

அன்னம்மாள் : இது பற்றித் திருவள்ளுவர் எதுவும் கூறியிருக்கிறாரா?

தாமரை : திருவள்ளுவர் சொன்ன கருத்தைத்தான் நான் உனக்குச் சொன்னேன்.

அன்னம்மாள் : நீ குறளைக் கூறவில்லையே!

தாமரை : கூறுகிறேன். கேட்டு நினைவில் பதித்துக்கொள்.

“ஊருணி நீர்நிறைந்து அற்றே உலகுஅவாம்
பேரறி வாளன் திரு (215)

அன்னம்மாள் : அதன் பொருளையும் விளக்குவாயா தாமரை?

தாமரை : ஊர்நடுவே உள்ள குளங்கள் எல்லாம் நீர் நிறைந்திருப்பதில்லை. ஊற்று உள்ள கிணறுதான் நிரம்பி இருக்கும்; அதில் உள்ள நீரும் எல்லாருக்கும் பொதுவானதாய் இருக்கும் அல்லவா?

அன்னம்மாள் : ஆமாம்.

தாமரை : நம் ஊரில் பெரிய வணிகர் ஒருவர் இருக்கிறாரே!

அன்னம்மாள் : யார்? பாரி ஐயாதானே?

தாமரை : ஆம். அப்படி ஊர்நடுவே உள்ள நிறைந்த பெரிய குளம் போன்றவர்தான் நம்ம பாரிஐயா.

அன்னம்மாள் : உண்மைதான் தாமரை. பாரி ஐயா அப்பேர்ப்பட்ட பெரிய குளம் போன்றவர். அதுவும் எல்லாருக்கும் தடையில்லாமல் நீர் கிடைக்க உதவும் ஊருணி போன்றவர்.

தாமரை : பெரும் பணம் உள்ள எல்லாருக்கும் இந்த மணம் வராது. திருவள்ளுவர் 'பேரறிவாளன். திரு' என்றாரே அந்தத் திருவைப் பெற்றவரே அப்படிச் செய்வர்

அன்னம்மாள் : 'பேரறிவாளன் திரு'. இதை இன்னும் கொஞ்சம் நல்லா விளக்கிடு தாமரை.

தாமரை : ‘பேரறிவாளன் திருவுடையவர்' யாரென்றால் வெறும் அறிவு மட்டும் கொண்டவர் அல்லர். அன்பு உடையர், அருள்மனம் கொண்டவர், மற்றவர்க்கு உதவ வேண்டும் என்ற ஆர்வம் உடையவர். அவர்தான் பேரறிவாளன் என்னும் திருவுடையவர்.

அன்னம்மாள் : தாமரை, திருக்குறளுக்கு இப்படி – இவ்வளவு அழகா பொருள் சொல்றியே, எனக்கு மிகவும் வியப்பாக இருக்கிறது.

தாமரை : நீயும் திருக்குறளை அழகாய்ப் படித்துத் தெளிவு பெறலாம். எல்லாவற்றுக்கும் முயற்சியும் உழைப்பும்தான் தேவை.

அன்னம்மாள் : முன்பு நீ சொன்ன திருக்குறளைச் சொல்லட்டுமா!

தாமரை : (வியப்புடன்) என்ன? நீ அதை மனப்பாடமே செய்து விட்டாயா?

அன்னம்மாள் : நீ திருக்குறளைச் சொன்ன முறை அப்படி. குறளை உணர்ந்து, அதன் கருத்து வெளிப்படுமாறு நின்று நிதானித்து வாசித்தாய். அப்படி வாசித்தபோது பொருள்கூட ஓரளவு புரிந்தது.

தாமரை : அன்னம். எங்கே, அந்தக் குறளைக் கூறு.

அன்னம்மாள் : ஊருணி நீர்நிறைந்து அற்றே உலகுஅவாம்
பேரறி வாளன் திரு.

தாமரை : அருமை! அருமை. என்னையே மிஞ்சிவிடுவாய் போலிருக்கிறதே!

அன்னம்மாள் : இப்பொழுதான் முயற்சியில் இறங்கி இருக்கிறேன்.

தாமரை : எல்லாருக்கும் உதவவேண்டும் என்ற மனம் உடையவரிடம் இருக்கும் செல்வமானது, ஊரார் நீர் உண்ணும் குளம், தண்ணீர் நிறைந்து இருப்பது போலாகும்.

அன்னம்மாள் : சரி. இன்னைக்கு வள்ளல் பாரி ஐயா அங்க இல்லையே ஏன்?

தாமரை : நம் ஊருக்கு, முன்பு இங்கு ஆசிரியராய் இருந்த தமிழ் அறிஞர் அருள்வாணன் ஐயா வந்திருக்கிறார். அவரைப் பார்க்கப் போயிருக்கிறாராம்.

அன்னம்மாள் : அப்படியா?

தாமரை : எங்க அப்பாவும் அவரைப் பார்க்கத்தான் போயிருகிறார். நீ சாயந்தரம் எங்க வீட்டுக்கு வா. மற்றதை எல்லாம் அங்க பேசலாம்.

அன்னம்மாள் : சரி. தாமரை, பிள்ளைகளைத் தமிழ் வகுப்புக்கு அனுப்பிட்டு நான் அங்க வருகிறேன்.

தாமரை : நல்லது. நான் புறப்படுகிறேன்.

அன்னம்மாள் : சரி புறப்படு. சாயந்தரம் நான் அங்கு வருவேன்.

காட்சி முடிவு

காட்சி : 2

இடம் : தாமரையின் இல்லம்

நேரம் : மாலை

கதை மாந்தர் : தாமரை, அன்னம்மாள்.

நிலை : அந்த ஊருக்கு வந்துள்ள அருள்வாணரைப் பற்றிய கலந்துரையாடல்.

தாமரை : வா அன்னம்மா. சொன்னது போல் சரியான நேரத்துக்கு வந்து விட்டாயே.

அன்னம்மாள் : எதிலும் ஓர் ஒழுங்கு முறையைக் கடைப்பிடிக்க வேண்டு மல்லவா? குறிபிட்ட நேரத்தில் குறிப்பிட்ட வேலையைச் செய்வதுதானே முறை.

தாமரை : அன்னம் நீ திருக்குறள் படிக்கத் தொடங்கிய பிறகு, உன் போக்கே மாறி விட்டது. எனக்கு அளவு கடந்த மகிழ்ச்சி.

அன்னம்மாள் : சரி, இப்பொழுது எதைப்பற்றிப் பேசப் போகிறோம்?

தாமரை : உன் வீட்டிலேயே சொன்னேன் அல்லவா? நம்ம ஊருக்கு வந்துள்ள தமிழ் அறிஞர் அருள்வாணன் ஐயா அவர்களைப் பற்றித்தான்.

அன்னம்மாள் : நீ தொடக்கத்தில் அவரிடம் படித்திருக்கிறாய்.. அவர் வேறிடத்துக்கு மாறிச் சென்றுவிட்டார்; பல்கலைக்கழகப் பேராசிரியர் ஆனார். பணி ஓய்வு பெற்றார். அவரைப் பற்றி நீ என்னிடம் இப்படிச் சொல்லியிருக்கிறாய்.

தாமரை : ஆமாம். சொல்லி இருக்கிறேன் பாரி ஐயா ஏழைகளின் வயிற்றுப் பசியைப் போக்குகிறார்; அருள்வாணன் ஐயா அறிவுப் பசியைப் போக்கி வருகிறார். திருக்குறள் நெறியைப் பரப்பி வருகிறார்.

அன்னம்மாள் : அப்படியா?

தாமரை : அருள்வாணன் ஐயா நன்கு உழைத்து சம்பாதித்தார். அறவழியில் பெருஞ்செல்வம் சேர்த்தார். இப்பொழுது அந்தப் பொருளைக் கொண்டு திருக்குறள் நெறியைப் பரப்பிவருகிறார். சிறுவர்களுக்கு நல்வழி காட்டும் தொண்டுனையும் செய்து வருகிறார்..

அன்னம்மாள் : அவரை நாம் பார்க்க முடியுமா?

தாமரை : பார்க்கலாம். நம்மைப் போன்றவர்களையும் கொண்ட ஒரு கூட்டத்துக்கும் ஏற்பாடு நடந்து வருகிறது.

அன்னம்மா : என்ன, அங்கே, பல புதிய புத்தகங்களை வைத்திருக்கிறாய்!

தாமரை : ஆம்! என் அப்பா அருள்வாணன் ஐயாவைப் பார்க்கச் சென்றார் அல்லவா? அப்பொழுது அவர் கொடுத்த புத்தகங்கள் இவை.

அன்னம்மா : அப்படியா?

தாமரை : அதில் உனக்கும் ஒரு புத்தகம் இருக்கிறது. போகும் போது எடுத்துச் செல்..

அன்னம்மா : நன்றி தாமரை. நீ எதற்கு எடுத்தாலும் குறள் சொல்லுவியே. அருள்வாணன் ஐயாவைப் பற்றி.....

தாமரை : சொல்வேன். தேடி எடுத்து வைத்திருக்கிறேன்.

அன்னம்மாள் : எங்கே சொல்.

தாமரை : தாள் ஆற்றித் தந்த பொருள் எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு (212)

அன்னம்மாள் : இது கொஞ்சம் கடினமான குறள் போல் தெரிகிறதே!

தாமரை : அப்படி ஒன்றும் இல்லை. பொருள் விளக்கத்தைப் படித்தால் எல்லாம் தெளிவாகிவிடும்.

அன்னம்மாள் : நீ தான் நன்றாகப் பொருளை விளக்குவாயே!

தாமரை : ஒருவன் பொருள் சம்பாதிக்கிறான் என்றால், மற்றவர் உதவி இன்றி அவன் மட்டுமே எதுவும் சம்பாதிக்க முடியாது. எத்தனையோ பேரின் உதவி இருந்தால்தான் அவன் சம்பாதிக்க முடியும்.

அன்னம்மாள் : நீ சொல்வது உண்மைதான் தாமரை. நான் அறச் சாலைக்குப் போனது உன் உதவியால் தானே?

தாமரை : இதனை உணர்ந்தவர் அருள்வாணர். அதனால்தான் இப்படித் தொண்டு செய்ய முன் வந்துள்ளார்.

அன்னம்மாள் : சரி குறளுக்கு எனக்கு நன்கு புரியுமாறு விளக்கம் கூறு.

தாமரை : இந்தக் குறளின் சாரம் என்ன வென்றால், நாம் பொருள் ஈட்டுவது மற்றவர்களுக்கு உதவுவதற்குத்தான் என்பதாகும்.

அன்னம்மாள் : இன்னும் கொஞ்சம் தெளிவாக விளக்கிடு தாமரை.

தாமரை : ஒருவன் தன்னிடம் சேரும் பொருளை எல்லாம், தனக்கு மட்டுமே என்று எண்ணாமல், தகுதி உடைய மற்றவர்களுக்கும் உதவுவதற்குகே என்று நினைக்க வேண்டும்; உதவ வேண்டும்.

அன்னம்மாள் : இப்பொழுது புரிகிறது தாமரை.

தாமரை : மீண்டும் முழுக் குறளுக்கும் பொருள் கூறுவேன். ஒருவன் தான் பெரு முயற்சி செய்து உழைத்துச் சம்பாதிக்கும் பொருள் எல்லாமே தனகுத்தான் என்று எண்ணாமல் தகுதியுடைய மற்றவர்க்கும் கொடுத்து உதவுதற்கே என்று எண்ண வேண்டும்.

அன்னம்மாள் : இப்பொழுது மிக மிக நன்றாக விளங்குகிறது. தாமரை. உனக்கு மிக மிக நன்றி.

தாமரை : நல்லது. அருள்வாணன் ஐயா எப்பொழுது நம்மை எல்லாம் அழைத்துக் கூட்டம் நடத்தப் போகிறார் என்பதைக் கூறுவேன். தவறாமல் வந்து விடு.

அன்னம்மாள் : காத்திருப்பேன் தாமரை. தவறாமல் வந்து விடுவேன். நான் புறப்படுகிறேன்.

தாமரை : மகிழ்ச்சியோடு சென்றுவா.

-- நாடகம் நிறைவு –

திருக்குறள் பல சிறப்புகளைக் கொண்டது. திருக்குறளே ஒரு அதியசம் தான். ஈரடிகளை கொண்ட திருக்குறளில் 7 சீர்கள் (வார்த்தைகள்) மட்டும் தான் இருக்கும். ஆனால், அவற்றில் அனைத்து மனிதர்களுக்கு தேவையான வாழ்வியல் தத்துவங்கள் புதைந்து கிடக்கும்.

திருக்குறளுக்கு உள்ள சிறப்புகளில் தனித்துவமானது ஈரடிகளில் வரும் 7 வார்த்தைகளில் இரண்டு வார்த்தைகள் தலா இரண்டு இடங்களில் திரும்பத் திரும்ப ஒன்றுக்கும் மேற்பட்ட பொருட்களில் இடம் பெறுவது ஆகும். நான் ஆய்ந்த வகையில் மொத்தம் 5 குறள்களில் இவ்வாறு இரு வார்த்தைகள் தலா இரு இடங்களில் மீண்டும், மீண்டும் வருகின்றன. அவற்றை இங்கு பார்ப்போம்....

1) குறள் எண் 12 அதிகாரம்: வான் சிறப்பு
துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை

2) குறள் 297 அதிகாரம்: வாய்மை
பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

3) குறள் 310 அதிகாரம்: வெகுளாமை
இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

4) குறள்: 623 அதிகாரம்: இடுக்கண் அழியாமை
இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர்.

5) குறள்: 1041 அதிகாரம்: நல்குரவு
இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது.

குவலயமெங்கும் குறள்நெறி பரப்பும் நான்கு இணைய இதழ்கள்

குறள்நெறி

குறள் முழக்கம்

THIRUKKURAL EXPRESS

குறள் விருந்து

ஆண்டுக் கட்டணம் வேண்டாம்!
நன்கொடை வேண்டாம்!
படியுங்கள்!பகிர்ந்திடுங்கள்!
anjal@kuralvirtual.com என்னும் மின்னஞ்சலுக்கு
உங்கள் மின்னஞ்சல் முகவரி அல்லது
புலன எண் தெரிவித்தால் போதும்!